உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்த குருப்யோ நம:

# கருவூர்த் திருவாணிலைநாதர் திருவிரட்டைமணிமாலை.

இஃது.

உறையூர் சித்தாந்த சைவப்பிரசாரகர்,

தே. பெரியசாமிபிள்ளையால்

இயற்றப்பெற்றது.

ஸ்ரீரங்கம்;

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்.

1920.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்த குருப்யோ நம:

# கருவூர்த் திருவானிலைநாதர் திருவிரட்டைமணிமாலை.

இஃது.

உறையூர் சைவசித்தாந்த சபைத் தனசாலாதிபரும்,
கு. தா. லாலாபேட்டைச் சித்தாந்த ஞானப்பிரகாச
சபைத் தலைவரும், பூவாளூர், திருவானைக்கா, சைவசித்
தாந்த சங்கங்களின் உபஅக்ராசனாதிபதியும்
சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் அத்தி
யக்ஷரும், உறையூர் ஸ்ரீமீனாட்சிசுந்தர வித்தியாசாலைத்
தலைவரும், ஆகிய
உறையூர் சித்தாந்த சைவப்பிரசாரகர்,

தே. பெரியசாமிபிள்ளையால்

இயற்றப்பெற்றது.



ஸ்ரீரங்கம்;

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்.

1920.

சிவமயம்.

# சாத்துக்கவிகள்.

—*—

திரிசிரபுரம் எஸ். பி. ஜி. காலேஜ்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
ஸ்ரீமான் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்
இயற்றியது.

மருவூரு நறும்பொழில்கள் வளர்ந்தூருங் கிளர்ந்தூரு
மாண்புமேய, கருவூரி னினிதுள்ளங் களித்தூரும் பசு
பதியார் கவினூர்தாட்குத், திருவூருமுறையூரிற் றிகழ்
பெரிய சாமிதமிழ்ச் செல்வன் சாத்தும், உருவூருமிரட்
டைமணிமாலையைக் கண்டுவப்பூராருலகில்யாரே.

---

திரிசிரபுரம் வித்துவான்
ஸ்ரீமான் அமிர்தம், சுந்தரநாத பிள்ளை இயற்றியது

பெத்தாச்சி போற்றும் பிறங்குகரு வூரார்க்கு
எத்தா விரட்டைமணி மாலையினை—இத்தாலம்
விள்ளப் பெரியசா மிப்புலவன் சூட்டினான்
உள்ளப் புதுமைதரவுற்று.

உ

சிவகுகமயம்.

# கருவூர்த்

# திருவானிலைநாதர் திருவிரட்டைமணிமாலை

## காப்பு.

திருவானிலைநாதர் சேவடிக்க ணோங்க
மருவாரிரட்டைமணிமாலை—பொருவாத
செந்தமிழாற் செய்யத் திருவருள் செய்யுமுயர்
தந்திமுகத் தெந்தையிருதாள்.

## நூல்.

## வெண்பா.

பூமேவு கஞ்சப் பொகுட்டமரு நான்முகனும்
மாமேவும் மார்புடைய மாயவனுங்—கோமேவு
வானவரு மற்றுமுள மாதவரும் வந்துதொழும்
தானபரா னானிலைநா தன். (க)

## கட்டளைக் கலித்துறை.

தன்மத்துரையெங்கள் பெத்தாச்சிவள்ளற் றகைநடத்தும்
நன்மங்கலத் திருவானிலைநாதர்தம் நல்விழவைக்
கன்மப் பரிசினர்காண்குவரோ வன்பர் கண்டிறைஞ்சிச்
சன்மப் பிணியறுத்தோவாப் பரகதி சார்குவரே. (உ)

உ

சிவமயம்.

# சாத்துக்கவிகள்.

—*—

திரிசிரபுரம் எஸ். பி. ஜி. காலேஜ்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
ஸ்ரீமான் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்
இயற்றியது.

மருவூரு நறும்பொழில்கள் வளர்ந்தூருங் கிளர்ந்தூரு மாண்புமேய, கருவூரி னிதுள்ளங் களித்தூரும் பசுபதியார் கவினூர்தாட்குத், திருவூருமுறையூரிற் றிகழ் பெரிய சாமிதமிழ்ச் செல்வன் சாத்தும், உருவூருமிரட்டைமணிமாலையைக் கண்டுவப்பூராருலகில்யாரே.

---

திரிசிரபுரம் வித்துவான்
ஸ்ரீமான் அமிர்தம், சுந்தரநாத பிள்ளை இயற்றியது

பெத்தாச்சி போற்றும் பிறங்குகரு வூராற்கு
எத்தா விரட்டைமணி மாலயினை—இத்தாலம்
விள்ளப் பெரியசா மிப்புலவன் சூட்டினன்
உள்ளப் புதுமைதரவுற்று.

உ

சிவகுருமயம்.

# கருவூர்த்

# திருவானிலைநாதர் திருவிரட்டைமணிமாலை

## காப்பு.

திருவானிலைநாதர் சேவடிக்க ணோங்க
மருவாரிரட்டைமணிமாலை—பொருவாத
செந்தமிழாற் செய்யத் திருவருள் செய்யுமுயர்
தந்திமுகத் தெந்தையிருதாள்.

## நூல்.

### வெண்பா.

பூமேவு கஞ்சப் பொகுட்டமரு நான்முகனும்
மாமேவும் மார்புடைய மாயவனுங்—கோமேவு
வானவரு மற்றுமுள மாதவரும் வந்துதொழும்
தானபரா னனிலைநா தன். (க)

### கட்டளைக் கலித்துறை.

தன்மத்துரையெங்கள் பெத்தாச்சிவள்ளற் றகநடத்தும்
நன்மங்கலத் திருவானிலைநாதர்தம் நல்விழவைக்
கன்மப் பரிசினர்காண்குவரோ வன்பர் கண்டிறைஞ்சிச்
சன்மப் பிணியறுத்தோவாப் பரகதி சார்குவரே. (உ)

## வெண்பா.

சார்ந்தாரைத் தாங்குந் தனியானிலைநாதர்
ஈர்ந்தார்வனை கழலையேயேத்துங்— கூர்ந்தார்
மதியேயும் பெத்தாச்சி மன்போல் வார்க்கல்லால்
விதியே மதியாய்விடும். (௩)

## கட்டளைக் கலித்துறை.

விடையாய்ச் சுமந்தும் விழிபெயர்த் தர்ச்சித்து மென்
மனையாய், புடையார்ந்திருந்தும் பொருகணையாகியும்
பொற்றிகிரிப், படையாரருள் படைத்தாரானிலைப் பரன்
பத்தியிலாக், கடையார் முடையாருடல் சுமந்தேங்கு
வர்காசினியே. (௪)

## வெண்பா.

காசினியோர் கொண்டாடுங் காவலன் பெத்தாச்சி
பேசினியகீர்த்திப் பிரதாபன்—மாசிலாப்
பத்திக்குவக்கும் பரனானிலைப்பதியே
எத்திக்கும் போற்றெம்மிறை. (௫)

## கட்டளைக் கலித்துறை.

இறையாதெனத்தெளியாமனத்தீர்பிறந்தெய்த்திறக்குங்
குறையார் பசுக்களைக்கொண்டேத்துவீர் நுங்குறிப்பெ
வனும், மறையாக மங்கண்முதல் யாவுமானிலைவான்
பொருளே, இறையாகு மென்னப்பசுபதிநாமங்கொண்
டேத்தவுமே. (௬)

## வெண்பா.

ஏற்றம் பிறவெவனு மெம்மானிலாதன்
சீற்றம் புலிச்சடையான் கேழ்கிளரும்—மாற்றறியா
பொன்னடிக்குத் தொண்டுசெயும் புண்ணியர்க்கேயா
மன்னடிமை செய்வதலாமல். [ளாகி (எ)

## கட்டளைக் கலித்துறை.

மல்லார் திருப்புயப் பெத்தாச்சிபோற் பணிமன் புரி
வார்க், கில்லாதுன் போல்பவர்க் கெவ்வாறருளுவமென்
னில்வரும், பொல்லா விபண்டகவேடற் கெவ்வாறு
புரிந்தனையால், செல்லார் பொழிற்றிருவா னிலைமேய
சிவக்கொழுந்தே. (அ)

## வெண்பா.

தேசிகனுய் வந்தென்றன் சென்மவிடாய்தீர்த்த மயில்
வாசிகனைப் பெற்று கந்தமாதேவர்க்—கேசிலா
மேனிலையார் மாடங்கண் மேன்மேல் வளர் கருவூர்
ஆனிலையே வாழுமகம் (கூ)

## கட்டளைக் கலித்துறை.

அலங்காரவல்லி யொருபாகத் தண்ணலையானிலைவாழ்
இலங்காரணத் தருவுச்சியிலே யொளிரின்கனியை
நலங்காண்கு நருணுஞ்சித் தாந்தத் தெய்வ நறுஞ்
சுவையை, கலங்காதருந்திக் களிப்ப தென்றோ விக்
கடையனுமே. (க0)

## வெண்பா.

கடையேனையாளுங் கடனுனக்கே யல்லால்
உடையார்பின் யாரேவுரையாய்—விடையேறுங்
கற்பகமே யானிலைவாழ் கண்ணுதலேபெண்ணொரு
சிற்பரமெய்ஞ்ஞானவமுதே. [பாற் (கக)

## கட்டளைக் கலித்துறை.

தேவாதிதேவன் றிருவானிலைப்பரன் சேவடியை
பூவாலருச்சித்துப் போற்றாதுழன்றிடும் புன்மை
நெஞ்சே, நீ வாவெனச் சொலிக் கூவியழைத்திட
நேருமன்னாள், நாவாலுரைத்திட வென் கடவாயங்
நமன் றனக்கே. (கஉ)

## வெண்பா

நகர மகரமென நாறுமல நீக்கி
யகரமெனவிருந்த யானே—வகரம்
அடையேனை நற்கருவூரையா சிகரம்
உடையானே சற்றே யுரை. (கங)

## கட்டளைக் கலித்துறை.

உரையாருன்னுமங்க ளோதார்தமிழ்மறை யுள்ளுருகிக்
கரையார்நின்முன்னின் றுகைகுவியார்நிதங் கண்டுதொழ
விரையார் விரைகு நர்க்கேவல்செயா ரிவ்விவேகமிலாப்
புரையாரிருந்திறந்தாவதென்ன னிலைப் புண்ணியனே.

## வெண்பா.

புண்ணாக நெஞ்சம் புலம்பும் புலையேனை
எண்ணாதிருப்பதுவு மேற்குமோ—விண்ணாரு
மாடமலிகருவூர் வாழ்பதியே நின்னொடும் யான்
தாடலைபோற் கூடு நிலைதா. (கரு)

## கட்டளைக் கலித்துறை.

தாதா திருவருட்போகமென் றேத்துந் தமியனிடம்
நீதான் சிறிதுமிரங்காதிருப்பது நீதங்கொலோ
வேதா முதற் பலவானவர் மோ னவர் மேவி நிதம்
நாதா வெனத் தொழுமானிலைமேவிய நாயகனே. (கசு)

## வெண்பா.

நாயகனாய் வந்தருளி நாயேனை யாட்கொண்ட
தூயவனை யானிலைக்கட்சுந்தரனை—நேயமுடன்
வந்திக்க சென்னி வழுத்திடுக வாய்நிதமுஞ்
சிந்திக்க சிந்தை யுவந்தே. (கஎ)

## கட்டளைக் கலித்துறை.

தேனாரிதழித்தொடையானையானிலைத் தெள்ளமுதை
கானார்சவுந்தரவல்லி தழுவிய கற்பகத்தை
கோனாகி வந்தெங் குடிமுழுதாண்ட குருமணியை
ஞானாகரனை யல்லாதொரு தேவரை நாடுவனே. (கஅ)

## வெண்பா.

நாட்டும் புகழ்ச் சோழர் நல்ல வெறிபத்தர்முதல்
நீட்டும் புகழ்ப் பெரியர் சீர்ச்சரிதம்—கேட்டும்
கனமேய்மதிற் கருவூர்க் கண்ணுதலுக் கன்பில்
மனமே வுனக்கென்ன மாண்பு (௧௧)

## கட்டளைக் கலித்துறை.

என்னைக் கெடுக்கவிசைந்த விருவினை யென்னுமுளை
தன்னைக் கெடுத்துக்கொடுப்பதென்றோ சகமேழுமருள்
மின்னைத் தழுவியவானிலைமேவிய வித்தகநின்
பொன்னைக்கடுத்தொளிரானந்தத்தேன்சொரிபூம்பதமே

திருவானிலைநாதர் திருவிரட்டைமணிமாலை
முற்றுப் பெற்றது.

---

## வாழ்த்து

வாழ்க திருக்கருவூர் வாழ்க பசுபதியார்
வாழ்க வலங்கார வல்லியுமை—வாழ்கவறம்
வாழ்கநம் பெத்தாச்சி வள்ளல்கொடை வைபகத்தே
வாழ்கதிருவேதாகமம்.

